காதுகண்கள்மூக்குவாய் கலந்தவாரதொன்றலோ
சோதியிட்டெடுத்ததுஞ் சுகங்களஞ்சுமொன்றலோ
ஓதிவைத்தசாத்திர முதித்துவாசதொன்றலோ
நாதவீடறிந்தபேர்க ளுதராவர்காணுமே. ருகஎ

அவ்வுதித்தவட்சரத்தி னுட்கலந்தவட்சரம்
சவ்வுதித்தமந்திரஞ் சம்புளதிருந்ததால்
மவ்வுதித்தமாய்கையால் மயங்குகின்றமாந்தர்காள்
உவ்வுதித்ததவ்வுமா யுருத்தரித்தவுண்மையே. ருகஅ

அகாரமென்னுமக்கரத்தி லக்கரமெழுந்ததோ
அகாரமென்னுமக்கரத்தி லவ்வுவந்துதித்ததோ
உகாரமுமகாரமு மொன்றிநின்றுநின்றதோ
விகாரமற்றஞானிகாள் விரித்துரைக்கவேணுமே. ருகசு

சத்தியாவதுன்னுடல் தயங்குசீவனுட்சிவம்
பித்தர்காளிதற்குமேல் பிதற்றுகின்றதில்லையே
சுத்தியைந்துகூடமொன்று சொல்லிறந்ததோர்வெளி
சத்திசிவமுமாகிநின்று தண்மையாவதுண்மையே. ருஉ0

சுக்கிலத்துளையிலே சுரோணிதக்கருவுளே
முச்சதுரவாசலில் மூளைக்கெழுந்தமோட்டினில்
மெய்ச்சதுரமெய்யுளே விளங்குஞானதீபமா
யுச்சரிக்குமந்திரம் ஓம்நமசிவாயமே. ருஉக

அக்கரமனாதியல்ல வாத்துமமனாதியல்ல
புக்கிருந்தபூதமும் புலன்களுமனாதியல்ல
தக்கமிக்கநூல்களுஞ் சாஸ்திரமனாதியல்ல
வொக்கநின்றுடன்கலந்த வுண்மைகாணனாதியே. ருஉஉ

மென்மையாகிநின்றதேது விட்டுநின்றுதொட்டதேது
வுண்மையாகநீயுரைக்க வேணுமெங்கள்உத்தமா
பெண்மையாகிநின்றதொன்று விட்டுநின்றுதொட்டதை
யுண்மையாயுரைக்கமுத்தி யுட்சலத்திருந்ததே. ருஉங

அடக்கினுமடங்குமோ வண்டமஞ்செழுத்துளே
யுடக்கினெடுத்தகாய முண்மையென்றுணர்ந்துநீ
சடக்கிலாறுவேதமுந் தரிக்கவோதிலாமையால்
விடக்குநாயுமாயசோதி வேறுவேறுபேசுமோ. ருஉச

உண்மையானசக்கர முபாயமாயிருந்ததுந்
தண்மையானகாயமுந் தரித்தரூபமானதும
வெண்மையாகிநீறியே விளைந்துநின்றதானது
முண்மையானஞானிகள் விரித்துரைக்கவேண்டுமே. ருஉரு

எள்ளகத்திலெண்ணெய்போல வெங்குமாகியெம்பிரா
னுள்ளகத்திலேயிருக்க வூசலாடுமூடர்காள
கொள்ளைபட்டவாளினைக குணக்கெடுக்கவல்லிரேல்
வ்ள்ளலாகிநின்றசோதி காணலாகுமெய்ம்மையே. ருஉசு

வேனுமென்றஞானமும் விரும்புகின்றநூலிலே
தானுமுண்டங்கென்கிறீர் தரிகிலீர்மறக்கிலீர்
தானுமொன்றுமூலநாடி தன்னுள்நாடியும்முளே
காணுமன்றிவேறியாவுங் கண்மயக்கமொகருமே. ருஉஎ

வழக்கிலேயுரைக்கிறீர மனத்துளேதவிக்கிறீர்
உழக்கிலாதுநாழியான வாறுபோலுமூமைகாள்
உழக்குநாலுநாழியான வாறுபோலும்முளோ
வழக்கிலேயுரைக்கிறீர் மனத்துளீசன்மன்றுமே. ருஉஅ

அறத்திறங்களுக்குநீ யண்டமெண்டிசைக்குநீ
திறத்தியங்களுக்குநீ தேடுவார்கள்சிந்தைநீ
யுறக்கும்நீயுணர்வுநீ யுட்கலந்தசோதிநீ
மறக்கொணாதநின்கழல் மறப்பினுங்குடிகொளே. ருஉகூ

ஆடுகின்றவெம்பிரானை யங்குமிங்குநின்றுநீர்
தேடுகின்றவீணர்காள் தெளிவதொன்றையோர்கிலீர
நாடிநாடியுமமுளோ நவின்றுநோக்கவல்லிரேல்
கூடொணாதநற்பரங் குவிந்துகூடலாகுமே. ருங0

சுத்தியைந்துகூடமொன்று சொல்லிறந்ததோர்வெளி
சத்தியுஞ்சிவமுமாகி நின்றதன்மையோர்கிலீர்
சத்தியாவதும்முடல் தயமருசிவனுட் சிவம
பித்தர்கா றிந்துகொள் பிரானிருந்தகோலமே. ருஙக

அகாரமானதம்பலம் மனுதியானதம்பலம
முகாரமானதம்பல முண்மையானதம்பல
மகாரமானதமபலம் வடிவமானதம்பலநு
சிகாரமானதம்பலம் தெளிந்ததேசிவாயமே. ருஙஉ

சக்கரம்பறந்தோடி சக்கரமேல்பலகையாய்
செக்கிலாமலெண்ணெய்போல சிங்குவாயுதேயுவு
முக்கிலேயொளிகலந்து யுகங்களுங்கலக்கமாய்
புக்கிலேபுகுந்தபோது போனவாறதெங்ஙனே. ௫௫௩

வளர்ந்தெழுந்தகொங்கைதன்னை மாயமென்றெண்ணிநீ
ரருள்கொள்சீவராருடம் புடைமையாகத்தோர்வீர்கள்
விளங்குஞானமேவியே மிக்கோர்சொல்லைக்கேட்பீரேல்
களங்கமற்றநெஞ்சுளே கருத்துவந்துபுக்குமே. ௫௫௪

நாலுவேதமோதுகின்ற ஞானமொன்றறிவீரோ
நாலுசாமமாகியே நவின்றஞானபோதமா
யாலமுண்டகண்டனு மயனுமந்தமாலுமாய்ச்
சாலவுன்னிநெஞ்சுளே தரித்ததேசிவாயமே. ௫௫௫

சுற்றமென்றுசொல்வதுஞ் சுருதிமுடிவில்வைத்திட
ரத்தர்சித்தமாடியே யமர்ந்திருந்ததெவ்விடம்
பத்திமுற்றியன்பர்கள் பரத்திலொன்றுபாழது
பித்தரேயிதைக்கருதி பேசலாவதெங்ஙனே. ௫௫௬

எங்ஙனேவிளக்கதுக் கேற்றவாறுநின்றதா
னெங்ஙனேயெழுந்தருளி யீசனேசரென்பரே
அங்ஙனேமறைபடாத தாழ்ந்துநோககவல்லரேல்
சிங்கமண்மியானைபோலத் திரிமலங்களற்றதே. ௫௫௭

அற்றவுள்ளகத்தையு மலக்கிடுமெழுகிடு
மெத்ததீபமிட்டதிற்பிற வாதபூசையேத்தியே
சுற்றவம்புரிந்துஏக நாதர்பாதம்நாடியே
கற்றிருப்பதேசரிதை கண்டுகொள்ளுமும்முளே. ௫௫௮

பாரத்தநின்றதம்பலம் பரமனாடுமம்பலங்
கூத்துநின்றதம்பலங் கோரமானதம்பலம்
வார்த்தையானதம்பலம் வன்னியானதம்பலஞ்
சீற்றமானதம்பலந் தெளிந்ததேசிவாயமே. ௫௫௯

சென்றுசென்றிடந்தொறுஞ் சிறந்தசெம்பொனம்பலம்
அன்றுமின்றுநின்றதோ ரனாதியானதம்பலம்
பன்றியன்னங்காணொணாத பரமனானதம்பலம்
மொன்றியொன்றிநின்றது ளொளிர்ந்ததேசிவாயமே. ௫௬0

தந்தைதாய்தமருநீ சகலதேவதையுநீ
சிந்தைநீதெளிவுநீ சித்திமுத்திதானுநீ
விந்துநீவிளைவுநீ மேலதாயவேதநீ
யெந்தைநீயிறைவனீ யென்னையாண்டவீசனே. ருசக

எப்பிறப்பிலும்பிறந் திறந்தழிந்தவேழைகா
ளிப்பிறப்பிலும்பிறந்து என்னநீறுபூசுறீ
ரப்புடன்மலமறுத்து ஆசைநீக்கவல்லிரேல்
செப்புராதமோசையிற் றெளிந்துகாணலாகுமே. ருசஉ

மந்திரங்கள்கற்றுநீர் மயங்குகின்றமாந்தரே
மந்திரங்கள்கற்றநீர் மரித்தபோதுசொல்விரோ
மந்திரங்களும்முளே மதிக்கநீருமும்முளே
மந்திரங்களாவது மனத்திலெந்தெழுத்துமே. ருசஙு

எட்டியோகமானது மியங்குகின்றநாதமும்
மெட்டுவக்கரத்துளே உகாரமுமகாரமும்
விட்டலர்ந்தமந்திரம் வீணுதணடிஞாடுபோ
வட்டவக்ஷரத்துளே யமர்ந்ததேசிளாயமே. ருசச

பிரான்பிரானென்றுநீர் பினத்துகின்றமூடரே
பிரானைவிட்டுமெம்பிரான் பிறிந்தவாறதெங்ஙனே
பிரானுமாய்பிரானுமாய் பேருலகுதானுமாய்
பிரானிலேமுளைத்தெழுந்த பித்தர்காணுமும்முடல். ருசரு

ஆதியில்லையந்தமில்லை யானநாலுவேதமில்லை
சோதியில்லைசொல்லுமில்லை சொல்லிறந்ததூவெளி
நீதியில்லைநேசமில்லை நிச்சயப்படாததும்
ஆதிகண்டுகொண்டபின் னஞ்செழுத்துமில்லையே. ருசசு

அம்மையப்பனப்புநீ ரமர்ந்தபோதறிகிலீ
ரமையப்பனானநீ ராதியானபாசமே
யம்மையப்பனின்னையன்றி யாருமில்லையானபின்
னம்மையப்பனின்னையன்றி யாருமில்லையில்லையே ருசஎ

நூறுகோடிமந்திரம் நூறுகோடியாகமம்
நூறுகோடிநாளிருந் தூடாடிநாலுமென்பயன்
ஆறுமாறுமாறுமாறுமா யகத்திலோரெழுத்ததாய்
சீறையேத்தவல்லிரேல் சிவபதங்கள்சேரலாம். ருசஅ

முந்தவோரெழுத்துளே முளைத்தெழுந்தசெஞ்சுட
ரந்தவோரெழுத்துளே பிறந்துகாயமானது
மந்தவோரெழுத்துளே யேகமாகிநின்றது
மந்தவோரெழுத்தையு மறிந்துணர்ந்துகொள்ளுமே. ருசகூ

கூட்டமிட்டுநீங்களுங் கூடிவேதமோதுநீர்
ஏட்டகத்துளீசனு மிருப்பதென்னெழுத்துளே
நாட்டமிட்டுநாடிடு நாலுமூன்றுதன்னுளே
யாட்டகத்துளாடிடு மம்மையாணையுண்மையே. ருரு௦

காக்கைமூக்கையாமையா ரெடுத்துரைத்தகாரணம்
நாக்கையூன்றியுள்வளைத்து ஞானநாடிபூடுபோ
யேக்கைநோக்கவட்சர மிரண்டெழுத்துயேத்திடிற்
பார்த்தபார்த்ததிக்கெலாம் பரப்பிரமமானமே. ருருக

கொள்ளொணாதுகுவிக்கொணாது கோதறக்குலைக்கொணாது
அள்ளொணாதுவனுகொணாது வாதிமூலமானதைத்
தெள்ளொணாதுதெளியொணாது சிற்பரத்தினுட்பயன்
விள்ளொணாதபொருளையான் விளம்புமாறதெங்ஙனே. ருருஉ

ஓசையுள்ளகல்லைநீ ருடைத்திரண்டாய்செய்துமே
வாசலிற்பதித்தகல்லை மழுங்கவேமிதிக்கிறீர்
பூசனைக்குவைத்தகல்லில் பூவும்நீருஞ்சாத்துறீர்
ஈசனுக்குகந்தகல்லு மெந்தக்கல்லுசொல்லுமே. ருருந

ஓட்டுவைத்துகட்டிநீ ருபாயமானமந்திரங்
கட்டுபட்டபோதிலுங் கர்த்தனங்குவாழுமோ
எட்டுமெட்டுமெட்டுளே யியங்குகின்றவாயுவை
வட்டமிட்டாய்விலே வைத்துணர்ந்துபாருமே. ருருச

இந்தவூரிலில்லையென்று எங்குநாடியோடுறீ
ரந்தவூரிலீசனு மமர்ந்துவாழ்வதெங்ஙனே
யந்தமானபொந்திலாரில் மேவிநின்றநாதனை
யந்தமானசீயிலவ்வி லறிந்துணர்ந்துகொள்ளுமே. ருருரு

புக்கிருந்ததுமுளே பூரியிட்டதோத்திரம்
தொக்குசட்சகிங்குலை யாக்கிராணன்சூழ்ந்திடி
லக்குமணிகொன்றைசூடி யம்பலத்துளாடுவார்
மிக்கசோதியன்புடன் விளம்பிடாதுபின்னையே. ருருசு

பின்னெழுந்தமாங்கிஷத்தை பேதையர்கண்பற்றியே
பின்புமாங்கிஷத்தினல் போகமாய்கைபண்ணினல்
துன்புறும்வினைகள்தான் சூழ்ந்திடும்பினென்றலோ
அன்பராயிருந்தபேர்க ளாறுநீந்தல்போல்விடே. ருருஎ

விட்டிருந்தும்முளே விதனமற்றிருக்கிறீர்
கட்டிவைத்தவாசல்மூன்று காட்சியானவாசலொன்று
கட்டிவைத்தவாசலுங் கதவுதான்திறந்துபோய்த்
திட்டமானவீசனைத் தெளியுமாங்கிஷத்துளே. ருருஅ

ஆருமாகுமாகுமே யனுதியானவப்பொருள்
ஒகர்பாதமநாடி நாடி யேத்திநிற்கவல்லிரேல்
பாகுசேர்மொழியுமைக்குப் பாலனுகியவாழலாம
வாகுடனேவன்னியை மருவியேவருந்திடீர். ருருகூ

உண்மையானதொன்றதொன்றை யுற்றுநோககியும்முளே
வண்மையானவாசியுண்டு வாழ்த்தியேத்தவல்லிரேல்
தண்மைபெறறிருக்கலாம் தவமும்வந்துநேரிடும்
கன்மதன்மமாகுமீசர் காட்சிதானுங்காணுமே. ருசா0

பாலனுகவேணுமென்று பத்திமுற்றுமென்பரே
நாலுபாதமுமண்டத்தில் நனைந்திரண்டடுத்ததால்
மூலநாடிதன்னில்வன்னி மூட்டியந்தநீருண
ஏலவார்குழலியோ யீசர்பாதமெய்துமே. ருசாக

எய்துநின்னையன்பினு லிறைஞ்சியேத்தவல்லிரே
லெய்துமுண்மைதன்னிலே யிறப்பிறப்பகற்றிடும்
மையிலங்குகண்ணிபங்கன் வாசிவானிலேறிமுன
செய்தவல்வினைகளுஞ் சிதறுமதுதிண்ணமே. ருசாஉ

திண்ணமென்றுசேதிசொன்ன செவ்வியோர்கள்கேள்மினே
யண்ணலன்புளன்புருகி யறிந்துநோக்கலாயிடும்
மண்ணதிரவிண்ணதிர வாசியைநடத்திடில்
நண்ணியெங்களீசனும் நமதுடலிருப்பனே. ருசாரு

இருப்பனெட்டெட்டெண்ணிலே யிருந்துவேறதாகுவன
நெருப்புவாயுநீருமண்ணும் நீள்விசும்புமாகுவன்
கருப்புகுந்துகாலமே கலந்தசோதிநாதனைக்
குருப்புனலில்மூழ்கினு குறித்துணர்ந்துகொள்வரே. ருசாசு

கொள்ளுவார்கள்சிந்தையிற் குறிப்புணர்ந்தஞானிகள்
விள்ளுவார்கள்பக்குவத்தில் வேணடிவேண்டியேத்தினல்
உள்ளுமாய்ப்புறம்புமா யுணர்வதற்குணருமாய்க்
தெள்ளிதாகநின்றசோதி செம்மையைத்தெளிந்திடே. ௫௬௫

தெளிந்தநற்சரியைதன்னில் சென்றுசாலோகம்பெறும்
தெளிந்தநற்கிரியைபூசை சேரலாஞ்சமீபமே
தெளிந்தநல்யோகந்தன்னில் சேரலாகுஞ்சாரூபம்
தெளிந்தஞானம்நான்கிலும் சேரலாஞ்சாயுச்சியமே. ௫௬௬

சேருவார்கள்ஞானமென்று செப்புவார்தெளிவுளோர்
சேருவார்கள்நாலுபாதச் செம்மையென்றறிவில்லையே
சேருவார்சிவகதி திருவருளைப்பெற்றபேர்
சேறுமாறுகண்டுநாஞருஞ் செய்தொழில்திடப்படே. ௫௬௭

திரிமலிகுநாலுபாதஞ் செம்மையுந்திறப்படார்
அறிவிலிகள்தேசநாடி யவத்திலேயலைவதே
குறியதனைக்காட்டியுட் குறித்துநோக்கவல்லிரேல
வெறிகமழ்சடையுளோன் மெய்ப்பதமடைவரே. ௫௬௮

அடைவுளோர்கள்முத்தியை யறிந்திடாதமூடரே
படையுடையதத்துவமும் பாதகங்களல்லவோ
மடைதிறக்கவாரியின் மடையிலேறுமாறுபோல்
உடலில்மூலநாடியை யுயரவேத்தியூன்றிடே. ௫௬௯

ஊன்றியேத்திமண்டல முறுவிமூன்றுதாள்திறந்
தான்றுநந்தியேறிடி லமுர்தம்வந்திறங்கிடும்
நான்றிதென்றுதொண்டருக்கு நாதனும்வெளிப்படு
மான்றியுமுயிர்பரம் பொருந்திவாழ்வதாகவே. ௫௭௦

ஆகமூலநாடியி லனலெழுப்பியன்புடன்
மோகமானமாயையில் முயல்வதுமொழித்திடில்
தாகமேருநாடியேக னேகமானவாறுபோ
லேகர்பாதமன்புட னிறைஞ்சிஞரறிவரே. ௫௭௧

அறிந்துநோக்கியும்முளே பயன்தியானமும்முளே
யிருந்திராமலேகர்பாதம் பெற்றிருப்பதுண்மையே
யறிந்துமீளவைத்திடா வகையுமரணமேத்தினர்
செறிந்துமேலைவாசலைத் திறந்துபாருமும்முளே. ௫௭௨

சோதியாகவும்முளே தெளிந்துநோக்கவல்லிரேல்
சோதிவந்துதித்திடுந் துரியாதீதமுற்றிடு
மாதிசக்கரத்தினி லமர்ந்துதீர்த்தமாடுவென்
பேதியாதுகண்டுகொள் பிராணனைத்திருத்தியே. ருஎ௩

திருவுமாய்சிவனுமாய் தெளிந்துளோர்கள்சிந்தையில்
மருவிலேயெழுந்துவீசும் வாசனையதாகுவன்
கருவிலேவிழுந்தெழுந்த கன்மவாதனையெலாம்
பருதிமுன்னிருளதாய்ப் பறியுமங்கிபாருமே. ருஎ௪

பாருமெந்தையீசர்வைத்த பண்பிலேயிருந்துநீர்
சேருமோடுவறிந்து செம்மையானவப்பொருள்
வேரையும்முடியையும் விரைந்துதேடிமாலயன்
பாரிடந்துவிண்ணிலே பறந்துங்கண்டதில்லையே. ருஎரு

கண்டிலாதயன்மாலென்று காட்சியாகச்சொல்லுறீர்
மண்டிலுலரனுடன் மேவலாயிருக்குமோ
தொண்டுபட்டுமன்புடன் தொழுதுநோக்கவல்லிரேல்
பண்டுமுப்புரமெரித்த பத்திவந்துமுத்துமே. ருஎ௬

முற்றுமேயவனெழுந்து முன்பினேனென்றுங்காண்கிலேன்
பற்றிலாததொன்றுதன்னை பற்றிநிற்கவல்லது
கற்றதாலேயீசர்பாதங் காணலாயிருக்குமோ
பெற்றபேரையன்புடன் பிரியமாகக்கேளுமே. ருஎஎ

கேட்டுநின்றவுன்னிலே கிடைத்தகா லத்துளே
வாட்டமுள்ளதத்துவ மயக்கமுமகற்றிடும்
வீட்டிலேவெளியதாகும் விளங்கவந்துநேரிடுங்
கூட்டிவன்னிமாருதங் குயத்தைவிட்டெழுப்புமே. ருஎஅ

எழுப்பிமூலநாடியை யிதப்படுத்தலாகுமே
மழுப்பிலாதசபையை வலித்துவாங்கவல்லிரேல்
சுழுத்தியுங்கடந்துபோய் சொப்பனத்திலப்புற
மழுத்தியோரெழுத்துளே யமைப்பதுண்மையையனே. ருஎகூ

அல்லதில்லையென்றதா னுவியும்பொருளுடல்
நல்லவீசர்தாளிணைக்கு நாதனுக்குமீந்திலை
என்றுயென்னுள்நேசமும் வாசியைவருந்தினல்
தொல்லையாம்வினைவிடென்று தூரதூரமானதே. ருஅ௦

ஆனதேபதியது யற்றதேபசுபாசம்
போனதேமலங்களும் புலன்களும்வினைகளும்
கானகத்திலிட்டதீயிற் காற்றுவந்தடுத்தலோ
ஆனகத்தில்வாயுவன்னி யொன்றியேயுலாவுமே. ருஅக

உலாவுமுவ்வுமவ்வுமா யுதித்தடர்ந்துநின்றது
மூலாவியைம்புலன்களு மொருதலத்திருந்திடும்
நிலாவுமங்குநேசமாகி நின்றமூர்தமுண்டுதாங்
குலாவுமெங்களீசனைக் குறித்துணர்ந்துகும்பிடே. ருஅஉ

கும்பிடுங்கருத்துளே குகனையைங்கரனையும்
நம்பியேயிடம்வலம் நமஸ்கரித்துநாடிட
வெம்பிரானுமம்மையு மிருத்தியோநடுவணைத்
தும்பிபோலவாசகந் தொடர்ந்துசோம்பிநீங்குமே. ருஅங

நீங்குமைம்புலன்களும் நிறைந்தவல்வினைகளும்
ஆங்காரமாமாசையு மருந்தடர்ந்தபாவமும்
ஓங்காரத்தினுள்ளிருந்தவொன்பதொழிந்தொன்றிலத்
தூங்கவீசர்சொற்படி துணிந்திருக்ககத்தமே. ருஅச

நினைப்பதொன்றுகண்டிலே னீயலாதுவேறிலை
நினைப்புமாய்மறப்புமாய் நின்றமாய்கைமாய்கையே
யனைத்துமாயகண்டமா யனாதிமுன்னனாதியாய்
நினக்குள்நானெனக்குள்நீ நினைக்குமாறதெங்ஙனே. ருஅரு

கருக்கலந்தகாலமே கண்டுநின்றகாரணம்
உருக்கலந்தபோதலோ வுன்னைநானுணர்ந்தது
விரிக்கிலென்மறைக்கிலென் வினைக்கிசைந்தபோதெலா
முருக்கலந்துநின்றபோது நீயும்நானுமொன்றலோ. ருஅசு

ஞானநூல்கள்தேடியே நவின்றஞானயோகிகாள்
ஞானமானசோதியை நாடியுள்ளறிகிலீர்
ஞானமாகிநின்றதோர் நாதனையறிந்தபின்
ஞானமல்லதில்லைவேறு நாமுரைத்ததுண்மையே. ருஅஎ

கருத்தரிப்பதற்குமுன் காயம்நின்றதெவ்விடம்
உருத்தரிப்பதற்குமுன் னுயிர்ப்புநின்றதெவ்விடம்
மருட்பொதிந்தசிந்தையில் மயக்கம்நின்றதெவ்விடம்
விருப்புணர்ந்தஞானிகாள் விரித்துரைக்கவேணுமே. ருஅஅ

கருவினிற்கருவதா யெடுத்தவேழுதோற்றமு
மிருவினைப்பயத்தினால் பிறந்திறந்துழன் றிடும்
மறுவினைப்பிறவிமூன்று காலமும்வகுத்தபின்
உறுவினைப்பயனிதென் றுணர்ந்தஞானிசொல்லுமே. ௫௮௯

வாயிலெச்சில்போகவே நீர்குடித்துத்துப்புவீர்
வாயிருக்களச்சில்போன வாறதென்னதெவ்விடம்
வாயிலெச்சிலல்லவோ நீருரைத்தமந்திரம்
நாதனையறிந்தபோது நாடுமெச்சிலேதுசொல். ௫௯௦

தொடக்கதென்றுநீர்விழத் தொடங்குகின்றவூமர்காள்
தொடக்கிருந்ததெவ்விடஞ் சித்தியானதெவ்விடம்
தொடக்கிருந்தவாறறிந்து சுத்திபண்ணவல்லிரேல்
தொடக்கிலாதசோதியைத் தொடர்ந்துகாணலாகுமே. ௫௯௧

மேதியோடுமாவுமே விரும்பியேபுணர்ந்திடில்
சாதிபேதமாயுருத் தரிக்கும்வாறுபோலவே
வேதமோதுவானுடன் புலைச்சிசென்றுமேவிடில்
பேதமாய்ப்பிறக்கிலாத வாறதென்னபேசுமே. ௫௯௨

வகைக்குலங்கள்பேசியே வழக்குரைக்குமாந்தர்காள்
தொகைக்குலங்களானநேர்மை நாடியேயுணர்ந்தபின்
மிகைத்தசுக்லமன்றியே வேறுமொன்றுகண்டிலீர்
நகைத்தநாதன்மன்றுள்நின்ற நந்தனியாறுபேசுமே. ௫௯௩

ஓதும்நாலுவேதமு முரைத்தசாஸ்திரங்களும்
பூததத்துவங்களும் பொருந்துமாகமங்களும்
சாதிபேதவண்மையுந் தயங்குகின்றநூல்களும்
பேதபேதமாகியே பிறந்துழன்றிருந்ததே. ௫௯௪

உறங்கிலேன்விழிக்கிலேனுணர்வுசென்றொடுங்கிலேன்
திறம்பிலேன்றிகைக்கிலேன் சிலதிசைகளெட்டிலேன்
புறம்புமுள்ளுமெங்கணும் பொதிந்திருந்ததேகமாய்
நிறைந்திருந்தஞானிகள் நினைப்பதேதுமில்லையே. ௫௯௫

அங்கலிங்கம்பூண்டுநீ ரகண்டபூசைசெய்கிறீர்
அங்கலிங்கம்பூண்டுநீ யமர்ந்திருந்தமார்பனே
யெங்குமோடியெங்குமெங்கு மீடழிந்துமாய்கிறீர்
செங்கல்செம்புகல்லெலாஞ் சிறந்துபார்க்குமூடரே. ௫௯௬

திட்டந்திட்டமென்றுநீர் தினமுழுகுமூடரே
திட்டமாகியல்லவோ திரண்டுகாயமானதும்
பூட்டகாயமும்முளே புகழுகின்றபேயரே
திட்டவந்துகொண்டலோ தெளிந்ததேசிவாயமே. ருகஎ

மூலநாடிதம்முளே முளைத்தெழுந்தவாயுவை
நாலுநாளுமும்முளே நடுவிருத்தவல்லிரேல்
பாலருகுமும்முடல் பறந்துபோகலாய்விடும்
ஆலமுண்டகண்டர்பாத மம்மைபாதமுண்மையே. ருகஅ

உந்திமேலேநாலுமூன்று ஓம்நமசிவாயமாகு
சந்திசந்தியென்றுநீர் சாற்றுகின்றபேயரே
முந்தவந்தநம்முளே மூலநாடியூடுபோய்
அந்திசந்தியற்றிட மறிந்துணர்ந்துபாருமே. ருகசு

வன்னிமூன்றுதீயினில் வாழுமெங்கள்நாதனுங்
கன்னியானதுள்ளிருக்கக் காதல்கொண்டதெவ்விடஞ்
சென்னிநாலுகையிரண்டு சிந்தையிலிரண்டிலொன்று
உன்னியுன்னியும்முளே யுய்த்துணர்ந்துபாருமே. சூ00

தொண்டுசெய்துநீங்களுஞ் சூழுவோடிமாள்கிறீர்
உண்டுறன்றாம்முளே யுற்றுணர்ந்துபார்க்கிலீர்
வண்டுலாவுசோலைசூழ வாழுமெங்கள்நாதனும்
பண்டுபோலநம்முளே பகுத்திருப்பனீசனே. சூ0க

அரியதோர்நமச்சிவாய மாதியந்தமானதும்
ஆறிரண்டுநூறுகோடி யளவிடாதமந்திரம்
தெரியநாலுவேதமாறு சாத்திரபுராணமுந்
தேடுமாலுமயனுஞ்சர்வ தேவதேவதேவனே. சூ0உ

பரமுனக்கெனக்குவேறு பயமுமில்லைபாரையா
கரமுனக்குநித்தமுங் குவித்திடக்கடமையாஞ்
சிரமுருக்கியமுதளித்த சீருலாவுநாதனே
யுரமெனக்குநீயளித்த வுண்மையுண்மையுண்மையே. சூ0ங

மூலவட்டமீதிலே முளைத்தவைந்தெழுத்திலே
கோலவட்டமூன்றுமாய்க் குளிர்ந்தலர்ந்துநின்றதீ
ஞாலவட்டமன்றுளே நவின்றஞானிமேலதா
யேலவட்டமாகியே யிருந்ததேசிவாயமே. சூ0ச

என்னகத்திலென்னைநா னெங்குமோடிநாடினே
னென்னகத்திலென்னையன்றி யேதுமொன்றுகண்டிலேன்
மின்னெழும்பிவிண்ணகத்தின் மின்னொடுங்கும்வாறுபோ
லென்னகத்துளீசனோடி யானுமல்லதில்லையே. ௬0௫

நாலுவேதமோதுகின்ற ஞானமொன்றறிவிரோ
நாலுசாமமாகிய நவின்றஞானபோதமாய்
ஆலமுண்டகண்டனு மயனுமந்தமாலுமாய்ச்
சாலவுன்னிநெஞ்சிலே தரித்ததேசிவாயமே. ௬0௬

மூச்சதுரமூலமாகி மூன்றதானபேதமா
பச்சதுரமும்முளே யடங்கவாசியோகமா
மெய்ச்சதுரமெய்யுளே விளங்குஞானதீபமா
புச்சரித்தமந்திர மோம்நமசிவாயமே. ௬0௭

மூன்றுமண்டலத்துளே முச்சதுரமாயமாய்
நாலுவாசலெண்விரலி னடுவுதித்தமந்திரங்
கோலியென்றுமைந்துமாய்க் குளிர்ந்தலர்ந்துநின்றநீ
மேலுமேலுநாடினேன் விளைந்ததேசிவாயமே. ௬0௮

இடங்கள்பண்ணிசுத்திசெய்தே யிட்டபீடமீதிலே
படங்கணீறும்பூசல்செய் தருந்தவங்கள்பண்ணுவீர்
ஒடுங்கிநின்றநாதனு ருதிக்குஞானமெவ்விட
மடங்குகின்றதெவ்விட மறிந்துபூசைசெய்யுமே. ௬0௯

புத்தகங்களைச்சுமந்து பொய்களைப்பிதற்றுவீர்
செத்திடம்பிறந்திடம் தெங்ஙனென்றறிகிலீர்
அத்தனையசித்தனை யறிந்துநோககவல்லிரோ
லுத்தமத்துளாயசோதி யுணரும்போகமாகுமே. ௬௧0

அருளிலேபிறந்துதித்து மாயைரூபமாகிய
இருளிலேதயங்குகின்ற வேழைமாந்தர்கேண்மினோ
பொருளிலேதவம்புனைந்து பொருந்திநோக்கவல்லிரேல்
அருளதேதுவன்னியின் மறைந்ததேசிவாயமே. ௬௧௧

ருக்கலந்தகாலமே கண்டிருந்தகாரணு
ருக்கலந்தபோதலோ வுன்னையானறிந்தனன்
ருககலந்தசோதியைத் தெளிந்துயானறிந்தபின்
ரிருக்கிலேனிறக்கிலே னிரண்டுமின்றிருந்ததே. ௬௧௨

தன்மசிந்தையாமளவுந் தவமறியாத்தன்மையாய்க்
கன்மசிந்தைவெயிலுழன்று கருத்துமிழ்ந்தகசடரே
சென்மசென்மந்தேடியுந் தெளியொணாதசெல்வனை
நன்மையாகவும்முளே நயந்துகாணவேண்டுமே. ௬௧௩

கள்ளவுள்ளமேயிருக்க கடந்தஞானமோதுவீர்
கள்ளமுள்ளமறுத்தபோது கதியிதன்றிக்காண்கிலீ
ருள்ளமேவிளக்கிநித்த மொளியணுகவல்லிரேற்
றெள்ளுஞானமும்முளே சிறந்ததேசிவாயமே. ௬௧௪

காணவேண்டுமென்றுநீர் கடன்மலைகளேறுவீர்
ஆணவமதல்லவோ வறிவில்லாதமாந்தரே
வேணுமென்றவீசர்பாதமெய்யுளே தரிப்பரேற்
றாணுவாகநின்றசீவன் றான்சிவமதாகுமே. ௬௧௫

அணுவினோடகண்டமா யளவிடாதசோதியைக்
குணமதாகவும்முளே குறித்துநோக்கின்முத்தியாம
மிணமிணென்றுவிரலையெண்ணி மீளொணாமயக்கமாய்த்
துணிவிலாதபடியினாற் றொடர்ந்துபூசைசெய்குவீர். ௬௧௬

எச்சிலெச்சிலென்றுநீ ரிடைந்திருக்குமேழைகா
டுச்சிலெச்சிலல்லவோ தூயகாயமானதும்
வைத்தவெச்சிறேனலோ வண்டினெச்சில்பூவலோ
கைச்சதாவில்வைத்துடன் கறந்தபாலுமெச்சிலே. ௬௧௭

தீர்த்தலிங்கமூர்த்தியென்று தேடியோடுந்தீதரே
தீர்த்தலிங்கமுள்ளினின்ற சீவனைத்தெளியுமே
தீர்த்தலிங்கமும்முளே தெளிந்துகாணவல்லிரேற்
றீர்த்தலிங்கந்தானதாய்ச் சிறந்ததேசிவாயமே. ௬௧௮

ஆடுகொண்டுகூடுசெய் தமர்ந்திருக்கும்வாறுபோற்
றேடுகின்றசெம்பினைத் திடப்படப்பரப்பியே
நாடுகின்றதம்பிரானு நம்முளேயிருக்கவே
போடுதர்ப்பபூசையென்ன பூசையென்னபூசையே. ௬௧௯

என்னையற்பநேரமு மறக்கிலாதநாதனே
ஏகனேயிறைவனே யிராசராசராசனே
யுன்னையற்பநேரமு மொழிந்திருக்கலாகுமோ
வுனதுநாட்டமெனதுநாவி லுதவிசெய்விரீசனே. ௬௨௦

எல்லையற்றுநின்றசோதி யேகமாயெரிக்கவே
யெங்கைபூரணப்பிரகாச ரேகபோகமாகிய
நல்லவின்பமோனசாக ரத்திலேயழுத்தியே
நாடொறுந்தவமிர்தமுண்டு நானழிந்துநின்றநாள். கூஉக

ஆனவாறதாயிடு மகண்டமானசோதியை
யூனேகாட்டியும்முளே யுகந்துகாணவல்லிரே
ஊனகாயமாளலா முலகபாரமாளலாம்
வானநாடுமாளலாம் வண்ணநாடராணையே. கூஉஉ

நித்தலுமணிதுலக்கி நீடுமூலைபுக்கிருந்து
கத்தியேகதறியே கண்கண்மூடியென்பயன்
எத்தனைபேரெண்ணினு மெட்டிரண்டுபத்தலோ
வத்தனுக்கிதேற்குமோ வறிவிலாதமாந்தரே. கூஉங

எட்டிரண்டுங்கூடியே யிலிங்கமானதேவனை
மட்டதாகவும்முளே மதித்துநோக்கவல்லிரேற்
கட்டமானபிறவியென் கருங்கடல்கடககலா
மிட்டமானவெளியிலே டிசைந்திருப்பீர்காண்மினே. கூஉச

உண்மையானமந்திர மொளியிலேயிருந்திடுந்
தண்மையானமந்திரஞ் சமைந்தரூபமாகிய
வெண்மையானமந்திரம் விளந்துநீறதானதே
யுண்மையானமந்திரம் தொன்றுமேசிவாயமே. கூஉரு

பன்னிரண்டுநாளிருத்திப் பஞ்சவன்னமொத்திட
மின்னியவ்வெளிக்குணின்று வேரெடுத்தமர்ந்த
சென்னியானதலத்திலே சீவனின்றியங்கிடும்
பன்னியுன்னியாய்ந்தவர் பரப்பிரமமாவரே. கூஉகா

தச்சிவாயிலுச்சிமே லாயிரந்தலங்களாய்
முச்சுடருமூவிரண்டு மூண்டெழுந்ததீசுடர்
வச்சிரமதாகியே வளர்ந்துநின்றதெவ்விடம்
இச்சுடருமிந்தியமு மேகமானதெங்ஙனே. கூஉஎ

முத்திசித்திதொந்தமாய் முயங்குகின்றமூர்த்தியை
மற்றுதித்தவைம்புலன்க ளாகுமத்திமப்புலன்
அத்தனித்தகாளகண்டரன்பிலைலனுதினை
முச்சரித்துளத்திலே யறிந்துணர்ந்துகொண்மினே. கூஉஅ

அண்ணலாரநாதியா யநாதிமுன்னநாதியாய்ப்
பெண்ணுமாணுமென்றலோ பிறப்பதாகுமுன்னலங்
கண்ணிலாணில்சுக்கிலங் கருத்தொடுங்கிநின்றபின்
மண்ணுளோருவிண்ணுளோரும்வந்தவாரதெங்ஙனே. சூஉசூ

எத்திசைக்குமெவ்வுயிர்க்கு மெங்களப்பனெம்பிரான்
முத்திஞானவித்துளே முளைத்தெழுந்தசெஞ்சுடர்
சித்தினிற்றெளிந்தபோது தேவர்கோயிற்சேர்ந்தன
னத்தனுடல்கண்டபோ தடங்கியாடலுற்றதே. சூ௩0

வல்லவாசலொன்பது மருத்தடைத்தவாசலுஞ்
சொல்லும்வாசலோரைந்துஞ் சொல்லிவிம்மிநின்றதும்
நல்லவாசலைத்திறந்து ஞானவாசலூடுபோ
யெல்லைவாசல்கண்டபி னினிப்பிறப்பதில்லையே. சூ௩க

ஆதியானதொன்றுமே யநேகரூபமாயமாய்ப்
பேதபேதமாயெழுந்து சர்வசீவனானபின்
ஆதியோடுகூடிமீண்டெழுந்துசன்மமானபின்
சோதியானஞானியாயிருந்து சுத்தமாயிருப்பரோ. சூ௩உ

வண்டுபூமணங்களோடுவந்திருந்ததேனெலாம்
உண்டுளேயடங்குவண்ண மோதுலிங்கமூலமாய்க்
கண்டுகண்டுவேரிலேகருத் தொடுங்கவல்லிரேற்
பண்டுகொண்டவல்வினை பறந்திடுஞ்சிவாயமே. சூ௩௩

ஓரெழுத்துலிங்கமாக வோதுமக்கரத்துளே
யோரெழுத்தியங்குகின்ற வுண்மையையறிகிலீர்
மூவெழுத்துமூவராய் முளைத்தெழுந்தசோதியை
நாவெழுத்துநாவுளே நவின்றதேசிவாயமே. சூ௩ச

தூரதூரதூரமுந் தொடர்ந்தெழுந்ததூரமும்
பாரபாரபாரமென்று பரிந்திருந்தபாவிகாள்
நேரநேரநேரமு நினைந்திருக்கவல்லிரேல்
தூரதூரதூரமுந் தொடர்ந்துகூடலாகுமே. சூ௩௫

குண்டலங்கள்பூண்டுநீர் குளங்கடோறுமூழ்குநீர்
மண்டுகங்கள்போலநீர் மனத்தின்மாசறுக்கிலீர்
மண்டையேந்துகையனை மனத்திருந்தவல்லிரேற்
பண்டைமாலயன்றொழப் பணிந்துவாழலாகுமே. சூ௩சூ

கூடுகட்டிமுட்டையிட்டுக் கொண்டிருந்தவாறுபோ
லாடிரண்டுகன்றையின்ற வம்பலத்துளாடுதே
மாடுகொண்டுவெண்ணெயுண்ணு மானிடப்பசுக்களே
வீடுகண்டுகொண்டபின்பு வெட்டவெளிகாணுமே. ௩௱௩௭

உள்ளதோபிறப்பதோ வுயிர்ப்படங்கிநின்றிடும்
மெள்ளவந்துகிட்டநீர் வினவவேண்டுமென்கிறீ
ருள்ளதும்பிறப்பது மொத்தபோதுநாதமாங்
கள்ளவாசலைத்திறந்து காணவேண்டுமாந்தரே. ௩௱௩௮

நட்டகல்லைதெய்வமென்று நாலுபுட்பஞ்சாத்தியே
சுற்றிவந்துமொணமொணென்று சொல்லுமந்த்ரமேதடா
நட்டகல்லும்பேசுமோ நாதனுள்ளிருக்கையில்
சுட்டசட்டிசட்டுவங் கறிச்சுவையறியுமோ. ௩௱௩௯

நானுமல்லநீயுமல்ல நாதனல்லவோதுவேன்
வானிலுள்ளசோதியல்ல சோதிநம்முளுள்ளதே
நானுநீயுமொத்தபோது நாடிக்காணலாகுமே
தானதானதத்ததான நாதனானதானனே. ௩௱௪௰

நல்லதல்லகெட்டதல்ல நடுவில்நிற்பதொன்றுதான்
நல்லதென்றபோதது நல்லதாகிநின்றபின்
நல்லதல்லகெட்டதென்றால் கெட்டதாகுமாதலால்
நல்லதென்றுநாடிநின்று நாமஞ்சொல்லவேண்டுமே. ௩௱௪௧

பேய்கள்கூடிப்பிணங்கடின்னும் பிரியமில்லாக்காட்டிலே
நாய்கள்சுற்றநடனமாடு நம்பன்வாழ்க்கையேதடா
தாய்கள்பாலுதிக்குமிச்சை தவிரவேண்டிநாடினால்
நோய்கள்பட்டுழல்வதேது நோக்கிப்பாருமும்முளே. ௩௱௪௨

உப்பைநீக்கிலழுகிப்போகு மூற்றையாகுமுடலில்நீ
அப்பியாசைகொண்டிருக்க லாகுமோசொலறிவிலா
தப்பிலிப்பொய்மானங்கெட்ட தடியனாகுமனமேகேள்
ஒப்பிலாசெஞ்சடையனாரு மொருவன்பாதமுண்மையே. ௩௱௪௩

பிறப்பதெல்லாமிறப்பதுண்டு பேதைமக்கள்தெரிகிலா
திறப்பதில்லையெனமகிழ்ந்து மெங்களுங்கள்சொத்தென
குறிப்புபேசித்திரிவரன்றி கொண்டகோலமென்னவோ
நிறப்பும்பொங்கியழிந்தபோது நேசமாமோயிசனே. ௩௱௪௪

கோலமிட்டமேனிகுன்றில் கொண்டகோலமெங்ஙனே
சீலமெங்குசீருமெங்கு செத்தொழிந்ததல்லவோ
சாலநின்றுசாமியென்று சாற்றவல்லதாசர்காள்
ஆலமுண்டகாலகண்ட னணைகாணும்காணுமே. சுசரு

முன்னிருந்தநிலைமறக்க மண்ணில்வந்தநாளிலே
பின்னிருக்கவகையறிய வேணுமன்றிவேறிலை
மன்னனென்றுநகன்னனென்று மதியிழந்துபேசலால்
பொன்னிக்கதுமண்ணைத்தேடும போகமாகுமாயமே. சுசசு

சுட்டெரிததசாந்துபூசும் சுந்தரப்பெண்மதிமுகத்
திட்டநெட்டெழுத்தறியா தேயஙிநோக்குமதிவலீர்
பெட்டகத்துப்பாம்புரங்கும் பித்தலாட்டமறியீரோ
கட்டவிழ்த்துப்பிரமன்பார்க்கில் கதியுமக்குயேதுகாண். சுசஎ

காலனென்றுசொல்லுவோர் கலங்கிநிற்பர்காணுமே
காலனென்றுசொல்லுவோர் காலனோடுசேர்வரே
காலனென்றுசொல்லுவோர் பாலனாகிமாள்வரே
காலனைமறந்துபோது காண்பாகாணுமீசனை. சுசஅ

வீடுநாடுநம்மதென்று வீண்புரளிசெய்குவர்
வீடுநாடுநம்மதாகில் காலநாடுநம்மதே
வீடுநாடுநம்மதென்று வாதுதான்செயாவிடின்
வீடுநாடளிப்பவன் விமலனானம்மீசனே. சுசகூ

வேதமோதுவேலையோ வீணதாகுமபாரிலே
காதகாதநூரமோடி காதல்பூசைவேணுமோ
ஆதிநாதன்வெண்ணெயுண்ட வனிருக்கனம்முளே
கோதுபூசைவேதமேது குறித்துபாருமும்முளே. சுரு௦

பரமிலாததெவ்விடம் பரமிருப்பதெவ்விடம
அறமிலாதபாவிகட்கு பரமிலையதுண்மையே
கரமிருந்தும்பொருளிருந்து மருளிலாதபோதது
பரமிலாதசூன்யமாகும் பாழ்நரகமாகுமே. சுருக

ஐந்துஎட்டுமென்றபோது நட்டகல்லுந்தெய்வமே
சந்தையையொழித்தபோது சிந்தையொன்றதாகுமே
பந்தமுள்ளமானிடர் பகுத்தறியாதழிவதால்
எந்தைநாதனென்செய்வா னிதறிவர்பித்தரே. சுருஉ

சித்தரென்றுஞ்சிறியரென்று மறியொணாதசீவர்காள்
சித்தரிங்கிருந்தபோது பித்தரென்றெணணுவீர்
சித்தரிங்கிருந்துமென்ன பித்தனாட்டிருப்பரே
அத்தநாடுமிந்தநாடு மவர்களுக்கெலாமொன்றே. ௬௫௩

மாதர்தோள்சேராததேவர் மானிலத்திலில்லையே
மாதர்தோள்புணர்ந்தபோது மனிதர்வாழ்சிறக்குமே
மாதராகுஞ்சகதியொன்று மாட்டிகொண்டதாதலால்
மாதராகும்பீலிகங்கை பகிழ்ந்துகொண்டானீசனே. ௬௫௪

சோகபோகயோகமென்ன நாலையுமந்தத்துன்பமே
சாகலாகாபோகம்வேண்டி தவமிருத்தல்நன்றலோ
காகமேறுந்தம்பிரானுங் காட்டமாட்டான்றலைநனே
நாகபூஷணனமக்கு நல்லனுவன்வல்லமே. ௬௫௫

தெய்வதெய்வமென்றுசொல்லி தேசதேசமோடுவீர்
தெய்வமுள்ளமேலிருந்து திருவரங்கங்காட்டுமே
தெய்வமந்ததெய்வமே தெளிந்தஞானங்கிட்டினுல்
தெய்வமேதுலைந்தலால் தெளிந்தஞானபானுவே. ௬௫௬

மாயமென்னமாயமே மறைந்துநிறகுமுபாயமே
ஞாயமொன்றுதித்தபோது ஆயஞாயமாயமே
காயமீதுகாலன்றுகில் காயமப்போமாயமே
தூயஞானபானுவாதி சொல்வதுசிவாயமே. ௬௫௭

சிவாயமென்றவக்ஷரஞ் சிவபெருமானக்ஷரம்
சிவாயமென்றபோதது சடாக்ஷரவுபாக்ஷரம
சிவாயவாயரூபமே திருமலையஷ்டாக்ஷரம்
சிவாயவாயரூபபேதந் தாக்கும்போதுமாயமே. ௬௫௮

அண்டபிண்டசராசர மடுக்காய்நின்றபோதிலே
கண்டுகொண்டபெண்கள்கற்பங் கண்டுவந்தமாந்தர்காள
தொண்டைநோகச்சொல்லுமந்த்ரஞ் சொல்லொணாதமந்திரம்
பண்ணை யந்தமந்திரம் பகர்ந்தமந்த்ரஞ்சிவாயமே. ௬௫௯

ஆதிதேவனானது மனாதிதேவனானதுஞ்
சோதிதேவனானதுஞ் சுயம்புலிங்கமானதும்
வேதன்வெற்பன்தொழுதுநிற்கு மாதர்தோளிணையுநன்
னாதனாதனாத னானதேர்சிவாயமே. ௬௬0

சருகருந்திநீர்குடித்து சாரல்வாழ்தவசிகாள்
சருகருந்திலதேகங்குன்றி சஞ்சலமுண்டாகுமே
வருவிருந்தோடுண்டுடுத்தி வளர்மனைசுகிப்பிரேல்
வருவிருந்தோனீசனுகி வாழ்வளிக்குஞ்சிவாயமே. ௬௬௧

ஒன்றுமூன்றுநான்குதான் நான்முகன்படைப்புதான்
ஒன்றுநான்குஐந்துதா னும்பர்கோனழிப்புதான்
ஒன்றுயேழுயெட்டுதா னுலகநாதன்காப்புதான்
ஒன்றில்மூன்றணையும்போ துஇப்பநுசிவாயமே. ௬௬௨

ஐந்துமெட்டுமொன்றுதா னதையறியாமாந்தர்காள்
தெந்தனத்தோடேசிபேசி தென்னவனுடேகுவீர்
அந்தயிந்தயென்றபேத மாவியுள்ளமட்டுமே
சொந்தனுனயீசன்பாதஞ் சேர்வதல்லோஞாயமே. ௬௬௩

நல்லபிள்ளைபெண்டுவாய்க்கில் நானிலத்தில்மகிழுவீர்
இல்லம்விட்டுயேகும்போது யிவரொலாம்பின்வருவரோ
தொல்லைநீர்செய்வினைகள்வந்து சூழுமன்றிவேறிலை
யல்லலானவவ்விரண்டை யறமறப்பீர்சிவாயமே ௬௬௪

ஆனைகட்டிசேனைகட்டி வாழுமன்னர்கோடிபேர்
பூனைகட்டவிடமிலாது போயொழியப்பார்த்துமே
ஊனைகட்டிநிலைத்திருப்ப துண்மையாமோகுருவெனும்
கோனைகட்டிவாழவேண்டுங் குறையிலைசிவாயமே. ௬௬௫

கூளம்போன்றமானிடக் குழாங்களானபாவிகாள்
தாளம்போடுந்தாசியாடில் தலைதெரியாதோடலேன்
காளகண்டனுதையில்மாண்ட காலனுமெதிர்வரும்
நாளைகாணிலென்செய்வீர் நாட்டங்கொள்ளும்நாதனே. ௬௬௬

உண்மைகண்டபேர்களு முணரகில்லாமாந்தரும்
பெண்மைகண்டுவாழ்ந்திருந்து பெற்றதுண்டுமேலிடம்
மண்மையிட்டுமயங்கினாளும் வந்துவந்துபிறந்திடும்
தண்மைகொண்டுமாள்வரல்லால் தனியைக்காணார்பாவமே, ௬௬௭

கேளுமந்தசோதியந்த சோதியாதிகம்முளே
நாளுமாளுமாளநாளும் நன்கறியவேணுமே
ஆளுநாளுநிக்கயிமயி யாகும்வேறுகாண்கிலேன்
தாளுபூசிநீறுபூசி சொல்லிநில்லுமைந்தயே. ௬௬௮

ஐந்தையெட்டைகிட்டைகூடி யழுத்தியுச்சரித்தபோ
தைந்துமெட்டுமொன்றதாகி யன்மைநீக்குமையனே
கந்தைகட்டிவேடமேது சந்தைகூட்டமேதுதான்
சிந்தைவிட்டொழிந்துசுத்த சிவத்தொடுங்கலப்பரே. சுசுசு

பாருமேபகருமே பாவிமக்கள்செவியிடங்
கூறுமேகுறியுமே கொண்டல்வண்ணன்சீரதை
ஆறுமேயைந்துமாகி வட்டவட்சரத்துள்நின்
றாருமூருநோக்கநோக்க வுயர்ந்தவீடுமெட்டுமே. சுஎ0

கிட்டுமென்றவீடது கிடக்குமும்முள்ளறிகிலா
துட்டருமெநாடிநாடி வாடிப்போவீர்மாந்தரே
அட்டலக்கிநாதன்றன்ன ரங்கன்சோதியானபோ
திட்டமன்றுள்ளாடுவா னிதறிமின்மாந்தரே. சுஎஉ

மாந்தர்வாழ்வுமண்ணிலே மறந்தபோதுவிண்ணிலே
சாந்தனை ஆவியைச் சரிப்படுத்தவல்லிரேல்
வேந்தனுமின்றாடும விமலன்பாதம்காணலாம்
கூந்தலம்மைகோணலொன்றுங் குறிக்கொணுதிதுண்மையே. ()

உண்மையுண்மைநாதனுண்மை யுலகமுண்மையல்லவே
கண்மைதிட்டுமாதராசைக் கலந்தாலஃதுமுண்மையே
தண்மைவேண்டில்மாதர்போகந் தள்ளிப்பாருங்காணுறு
நண்பனீசன்யோகியாகி நாடிநிற்பனும்முளே. சுஎச

உம்முளேயெலாமிருக்க வுணரகில்லாமாந்தரே
உம்முளேயிருப்பதென்ன யிலாததெதென்னசொல்லுவீர்
உம்முளேயிருக்குமை யொழிந்தபோதுவுண்மைதான்
உமமுளேவெளிப்படு முலகபோகநீங்குமே. சுஎரு

நீங்கும்வெண்கலத்தினுசை யோட்டையாகிலாவியைத்
தாங்குமுங்கடேகம்வீழில் தவித்துவாழ்வீர்நரகினி
லோங்கும்பச்சைவண்ணனுட லூற்றுநோக்கவல்லிரேல்
தூங்குமெச்சுகத்திலென்றுந் தூங்கிவாழ்விருண்மையே. சுஎசு

அஞ்செழுத்தினிற்பிருதி யாகுமோங்காரமே
நெஞ்சகத்திருத்திநாறு நிறமுறைக்கவல்லிரேல்
வஞ்சகப்பகைவரும் வலதுறைத்தபேர்களுந்
கெஞ்சியேபணிவர்யாவுங் கேட்டதெலாமீவரே. சுஎஎ

அப்புவினெழுத்தினி லமைந்ததோர்மகாரமே
செப்பிடதினத்தினூறு திறமுறைக்கவக்கணந்
தப்பிடாதெவருமுன் தடமொடிங்கிராப்பகல்
எப்பொழுதும்வார்த்தைசொல்லி யின்பமாயிருப்பரே. சுஎஅ

கனலதினெழுத்துடன் கலந்ததோர்சிகாரமே
நினைவதிலிருத்தினூறு திறமுறைக்கவல்லிரேல்
முனைமுகத்துப்போரரசர் முன்பணிவர்யாவரும்
மனமதுமகிழ்ந்துவாழ்க வல்லெழுத்திதாகுமே, சுஎசு

வாயுவினெழுத்தது வழங்கிடும்வகாரமும்
நேயமாகநூறுதிற நிதமுருசெபித்திடின்
ருயுடன்பெண்ணுண்மிருகஞ் சாரும்பட்சியரவுமே
பேயுடன்பேதாளபிரம்ம ராட்சசுவசியமே. சுஅ௦

விண்ணெழுத்துவோங்கிட விரும்பியேயகாரசொல்
மெண்ணிவித்தமநூருறு யிடரறச்செபித்திடின்
மண்ணுடன்கருவுபாவை வைப்புசூனியம்முதல்
குண்ணிடுமாரணமுங் குலைகுலைந்தொடுங்குமே. சுஅக

சீச்சீசீச்சீசிச்சீயென்று செப்பிடச்சினம்வரா
சீயெனவிகழ்ந்தொருசொல் செப்பிடச்சினமதாய்ச்
சீயென்றேசிதாடைமீது திட்டெனவடித்திட
சீயெனும்பல்லங்களே சிதறிவிழுந்தேகுமே. சுஅஉ

முன்னெழுத்துவொன்றுடன் மூன்றெழுத்துங்கூட்டியே
பின்னெழுத்திரண்டினைப் பிணைத்துருவேதற்றிட
தன்னெழுத்துமுன்றினைச் சந்ததஞ்செபித்திடின்
மன்னெழுத்துவாலையக்ஷ ரமுமாகுமங்ஙனே. சுஅங

சிவாயவசியென்னவுஞ் செபிக்கவிச்சகமெலாம்
சிவாயவசியென்னவுஞ் செபிக்கயாவுஞ்சித்தியாம
சிவாயவசியென்னவுஞ் செபிக்கவானமாளலாம்
சிவாயவசியென்பதே விருதலைத்தீயாகுமே. சுஅச

ஊனெழுத்துயிரெழுத்து வூமையெழுத்தானதும்
மானெழுத்துமாரெழுத்து மாயெழுத்துவானதும்
பானெழுத்துபாரெழுத்து பாவெழுத்துவானதும்
கோனெழுத்துக்கூடெழுத்து கூர்நமசிவாயமே. சுஅரு

கல்லுவெள்ளிசெம்பிரும்பு காச்பிடுந்துராக்களில்
வல்லதேவரூபபேத மங்கமைத்துபோற்றிடில்
தொல்லையற்றிடப்பெருஞ் சுகந்தருமோசொல்வாய்
இல்லையில்லையில்லையில்லை யீசனாணையில்லையே. ௬௮௬

காடுமேடுகுன்றுபள்ளங் காணினாறுகற்றியும்
நாடுதேசம்விட்டலைவர் நாதன்பாதங்காண்பரோ
கூடுவிட்டகன்றுன்னாவி கூத்தனார்க்கேனைக்கலால்
வீடுபெற்றரன்பதத்தில் விற்றிருப்பரில்லையே. ௬௮௭

தங்கள்தேகநோய்பெறில் தனிப்பிடாரிக்கோயிலிற்
பொங்கல்வைத்துவாடுகோழிப் பூசைபலியிட்டிட
நங்கச்சொல்நலிமிகுந்து நாளுந்தேஞ்சிமூஞ்சூராய்
உங்கள்குலதெய்வமுங்க ளுருகுலைப்பதுண்மையே. ௬௮௮

நேசமுற்றுப்பூசைசெய்து நீறுபூசிச்சந்தனம்
வாசமோடணிந்துநெற்றி மைதிலர்தமிட்டுமே
மோசம்பொய்புனைசுருட்டு முற்றிலுஞ்செய்மூடர்காள்
வேசிகள்ம்புரண்ட வெண்ணீராருமேனியே. ௬௮௯

கட்டையாற்செய்தேவருங் கல்லினாற்செய்தேவரும்
மட்டையாற்செய்தேவரும் மஞ்சளாற்செய்தேவரும்
சட்டையாற்செய்தேவருஞ் சாணியாற்செய்தேவரும்
வெட்டவெளியதன்றிமற்ற வேறுதெய்வமில்லையே. ௬௯0

பேரிழவுகருமஞ்செய்த பிண்டசாதஉண்டையை
காருமுன்வுரவுண்ணாது காகத்திட்டருந்திடச்
சேரமோட்சவீட்டரிகில் செல்வரோகதிபெறப்
பாரினில்மடிந்தோர்நாளும் பாழ்நரகிலெய்வரே. ௬௯௧

எத்திசையெங்கெங்குமோடி யெண்ணிலாநதிகளிற்
சுத்தியுந்தலைமுழுகச் சுத்தஞானியாவரோ
பத்தியோடரன்பதம் பணிந்திடாதபாவிகாள்
முத்தியாறிபாழ்நரகில் மூழ்கிநொந்தலைவரே. ௬௯௨

ஆசைகொண்டனுதினமு மன்னியர்பொருளினை
மோசஞ்செய்தபகரிக்க முற்றிலுமலைபவர்
பூசையொடுநேமநிட்டை பூரிக்கச்செய்யாதகாள்
காபினியிலெழுநரகைக் காத்திருப்பதுண்மையே. ௬௯௩

காயகாயமுண்பதாகக் கண்டவர்மதித்திட
மாயவித்தைசெய்தெங்கு மடிப்புமோசஞ்செய்பவர்
நேயமாய்க்கஞ்சாவடித்து நேரமினைத்திருப்பதால்
நாயதாகநக்கிமுக்கி நாட்டினிலலைவரே, சுசுரு

நீரினிற்குமிழியொத்த நிலையிலாதகாயமென்று
ஊரினிற்பறையடித்து தாரியாய்த்திரிபவர்
சீரினிலுணக்குஞான சித்திசெய்வேன்பாரென
நேரினிற்பிறர்பொருளை நீளவுகைப்பற்றுவார். சுசுசு

செம்மைசேர்மரத்திலே சிலைதலைகள்செய்கிறீர்
கொம்மையற்றகிளையில்லாத குரடுசெய்தழிகருகிறீர்
நம்முளேவிளங்குவோனை நடுநேர்க்கவல்லிரேல்
இம்மளமும்மளமு மெம்மளமுமல்லவே. சுசுஎ

யோகஜாடைகாட்டுவார் உயரவும்யெழும்புவார்
வேகமாகவட்டசித்து வித்தைசற்கெட்டுவார்
மோகங்கொண்டுமாதரின் மூத்திரப்பைசிக்கிபின்
பேயதுபிடித்தவன்போற் பேருலகிற்சாவமே. சுசுஅ

வாதஞ்செய்வேன்வெள்ளியும்பொன் மாத்துயர்ந்ததங்கமும்
போதவேகுருமுடிக்கப் பொன்பணங்கள்தாவென
சாதனைசெய்தெத்திசொத்து தந்தைதக்கவர்ந்துமே
காததூரமோடிசெல்வர் காண்பதுமருமையே. சுசுகூ

காவியுஞ்சடைமுடி கமண்டலங்களாசனம்
தாவிருத்திராட்சம்யோக தண்டுகொண்டமாடுகள்
தேவியையலையவிட்டுத் தேசமெங்குஞ்சுற்றியே
பாவியெனவீடெலாம் பருக்கைகேட்டலைவரே. சுஎ0

முத்திசேரசித்திஇங்கு முன்னளிப்பேன்பாரெனச்
சத்தியங்கள்சொல்லியெங்குஞ் சாமிவேடம்பூண்டவர்
நித்தியம்வயர்வளர்க்க நீதிஞானம்பேசியே
பத்தியாய்ப்பணம்பறித்துப் பாழ்நரகில்வீழ்வரே. எ00

பாதக்குறடிட்டுக்காலிற் பாரச்சடைசுற்றியும்
போதஞுகிஷியர்பக்கம் போக்குவருத்தாகவும்
நீதமாய்மௌனச்செய்கை நேரிற்காட்டிச்சாடைசெய்
சூதுபுரிசாமிகளாய்த் தொல்லுலகுழல்வரோ. எ0க

எட்டெழுத்துரெண்டெழுத்து யேகமோரெழுத்துடன்
தொட்டெழுத்துவிட்டெழுத்து தோனுயிரெழுத்ததில்
கட்டெழுத்துகாலெழுத்துக் காட்சியெழுத்தானதும்
ஓட்டெழுத்துவோரெழுத்து வூமையெழுத்தானதே. எ0உ

ஆதியாயரிக்குமுன்ன மங்கெழுந்தவட்சரம்
சோதியாயரிக்குமுன்னஞ் சொல்லுகின்றவட்சரம்
வாதியாயரிக்குமுன்ன நிற்குமந்தவட்சரம்
நீதியாயரிக்குமுன்ன நின்றதஞ்செழுத்ததே. எ0௩

ஊமையெழுத்தானதே வுடலதாயமைந்தது
ஓமெழுத்துவானதே வுயிரதாயுதித்தது
ஆமெழுத்துவானதே வகிலமாய்ச்சனித்தது
நாமெழுத்துமூன்றிலுஞ் சராசரங்களானதே. எ0௪

இச்சகஞ்சனித்ததுவு மீசனைங்தெழுத்திலே
மெச்சவுஞ்சராசரங்கள் மேவுமைங்தெழுத்திலே
உச்சிதப்பலவுயிர்க ளோங்கலஞ்செழுத்திலே
நிச்சயமெஞ்ஞானபோத நிற்குமைங்தெழுத்திலே. எ0௫

சாத்திரங்கள்பார்த்துபார்த்து தான்குருடாவதால்
நேத்திரங்கெடவெய்யோனை நோந்துசெய்மூடர்ககாள
பாத்திரமறிந்துமோன பக்திசெய்வல்லிரேல்
சூத்திரப்படியாவருஞ் சித்தராவரங்கனே. எ0௬

காணுதுகிட்டாதுகைக் கெட்டாதுகண்டிட்டாலது
தோணுதுதுடர்ந்திடாது தொட்டிடவெட்டாதது
ஈணிடாதிசைந்திடாது விங்குமங்குமல்லது
நாணுதுநத்தாதுசொக்கி நாடெங்கெங்குமுள்ளதே. எ0எ

ஆயனைங்தெழுத்திலே யானுமைங்தெழுத்திலே
மாயனைங்தெழுத்திலே மாலியைங்தெழுத்திலே
காயமைங்தெழுத்திலே காட்சியைங்தெழுத்திலே
வாயுமைங்தெழுத்திலே வையமைங்தெழுத்துளே. எ0அ

அஞ்செழுத்துவெட்டெழுத்து வன்பத்தோரெழுத்தது
நெஞ்செழுத்துநெட்டெழுத்து நீடுழிதழைத்தது
துஞ்செழுத்துச்சுட்டெழுத்துச் சூட்சமாதிசூட்சமாம்
மிஞ்செழுத்துமெய்யெழுத்து மேலெழுத்துமொன்றிலே. எ0௯

ஏய்க்குமைந்தெழுத்தினையு மெண்ணியேபிடித்திடார்
வாய்க்குவந்தமட்டுளறி ஜாதிபேதமோதுவோர்
நோய்க்குளேமடிந்துநாளு நட்பொருளைகாண்கிலார்
பாய்கருளேபடுத்துவாதைப் பட்டுழன்றுமாய்வரே. எக0

சிதம்பரத்தின்சக்கர சித்தரிக்கிலாதபேர்
நிதம்பரமசிவனையும நினதனைசெய்பாதகர்
சதம்பரமக்கியானியாகச் சாத்திரநூலாய்குவா
அதம்பரவவுலகினி லங்கிங்குமலைவரே. எக்க

மனவுருதிதானிலாத மட்டிப்பிணமாடுகள்
சினமுறைப்பிறர்பொருளைச் சேகரித்துவைத்ததை
தினந்தினமூரெங்குஞ்சுற்றி திண்டிக்கேயலைபவர்
இனமதிற்பலர்கள்மைவயு மின்பமற்றபாவியே. எகஉ

உட்புப்பாண்டமோட்டாவிய கோடிமுழுபிரடா
கப்படிக்குஉனடாமுற காலனுக்கிரையடா
ஒப்படிசெய்செல்லடா வுமிப்பதர்களிக்கடா
எப்படிக்கிருக்கினுமிறப்பதுண்மையுண்மையே. எகந

உச்சினேருண்ணுவின்மே லோர்விளக்கெறியுதாம
இச்சையற்றஞானிகட்கு வெறிக்கினுநதெரியுதாம
அச்சமட்டவாசிகுதிரைக் கங்குபடியும்வைத்திடில்
உச்சியிலெறியுஞ்சோதி யுளளொளியைக்காணுமே. எகச

எங்குமாறுவீட்டிலெண்ணை யில்லாத்தீபமேற்றியும்
மங்கிடாதெரியுதுபார் மாணிக்கவொளியதாய்
பொங்கமாய்மணிவிளக்கைப் பூரிக்கத்தரிசித்தோர்
சங்கையற்றுத்தன்னைத்தா னறிந்தவர்களாவரே. எகரு

சங்குவொன்றுதாரைரெண்டு சதங்கையின்சிலம்பொலி
எங்கினுமுழங்கவோசை யிட்டுநன்னடம்புரி
சங்கரன்சடாதரனற் சாம்பவிமனோகரன்
திங்களைச்சடையணிந்தோன் சீர்பதமுங்காண்பரே. எகசா

வாசிக்குதிரைமீதிலேறி மண்டலங்கள்தாண்டியும்
நாசிவழியிலேறியோக நாட்டமுமறிகிலார்
பூசிக்கவமுதமுண்டு பொன்மயமதாகினோர்
வீசிம்பாசக்கையுளோனை வென்றுவிண்ணேயாள்வரே. எகள

மூலமாறுவீட்டினில் முளைத்தெழுந்தமுச்சுடர்
காலிரண்டுமாறிமாறிக் ககனமீதெழும்பியும்
தூலவீடெட்டடியிற் சொருகித்தூங்கவல்லவர்
சீலமேவுஞானியாகிச் சிற்பரனைக்காண்பரே. எகூ

நந்தவனமாறுமனை நாலைந்துபேர்காவலர்
சொந்தவீடுகாதமெட்டிற் சுற்றிவரவல்லவர்
நிந்தையற்றுத்தில்லைவெளியி னிர்த்தனத்தைக்கண்டிட
சந்ததம்பிறப்பிறப்புத் தானகன்றுவாழ்வரே. எகக

வீடுமேலுமாறடுக்கு விண்ணளாவக்கட்டியும்
கூடுதொண்ணூற்றாறுபேரைக் கூட்டியுறவாடியும்
தேடும்பொருள்வஸ்துவொன்றாய் சிந்தையிலமைத்தவர்
நாடுதேசங்காடுவிட்டு நற்பதவிசேர்வரே. எஉ0

வெற்றியாறடுக்குமேலும் விண்ணடுக்குமானது
சுற்றியெங்கும்மேவுகார் தொடர்ந்துலாவுநற்றலம்
முற்றிலுமாக்கினைகொண்டு மோகமற்றுவாழ்பவர்
நெற்றியிற்சதாசிவன் மனோன்மணியுங்காண்பரே. எஉக

வழுத்துமாறடுக்குமேலும் வாய்வடுக்குமானது
பழுத்திடும்பழமதுவாய்ப் பண்புளதுநற்றலம்
சுத்தியில்விசுத்திகொண்டு சுத்தமாயங்குள்ளவர்
கழுத்தினில்மயேஸ்வரன் மயேஸ்வரியைக்காண்பரே. எஉஉ

பாரிலாறடுக்குமேலும் பத்தடுக்குமானது
நேரினிலமைந்தநித்திய னந்தமானநற்றலம்
சீரினிலனாகதத்திற் சேரவுமங்குள்ளவர்
பாரினில்ருத்திரன்ருத்திரி வாழ்ந்திடவுங்காண்பரே. எஉ௩

சந்தியாறடுக்குமேலு சம்பரமானகட்டடம்
பந்தியாய்ப்பதிதர்கூடி பக்திசெயுநற்றலம்
முந்தியும்மணிபூரக மோதவுமங்குள்ளவர்
உந்தியில் விஷ்ணுலட்சுமி யோங்கிடவுங்காண்பரே எஉ௪

ஞாலத்தினிலாறடுக்கு மேல்நளினகட்டடம்
கோலத்துடன்மாதவர்கள் கூடியுள்ளநற்றலம்
பாலத்திற்சுவாதிஷ்டான பதியிலங்குள்ளவர்
மூலத்திற்பங்கயன்வாணி முன்னிருக்கக்காண்பரே. எஉ௫

வையத்தினிலாறடுக்கு மேலடுக்குமானது
உய்யவேமுனிவராங் குலாவியுள்ளநற்றலம்
பையவுமூலாதாரத்திற் பார்க்கவுமங்குள்ளவர்
குய்யங்கணங்கரன்வல்ல பையைக்கூடக்காண்பரே. ௭௨௬

கோட்டையொன்பான் வாசலிற்கூடியுள்ளோரைந்துபேர்
நோட்டக்காரராறுபேர்க ணக்கர்தொண்ணூற்றாறுபேர்
மேட்டைச்சுற்றிக்கொல்லையெங்கும் வேணவித்துதூவியும்
வாட்டமாய்ப்பயிர்விளைத்து வாழ்ந்துகொண்டிருப்பர்காண். ௭௨௭

இவ்விதத்திலூனெடுத்திருப்பதையறிந்திடார்
செவ்வையாயோசிக்கிலுண் டுறங்குதற்பெரிதென
ஔவியம்பொய்வஞ்சனைசூ தானதையியற்றியும்
கௌவுநாயைப்போலுழன்று காசினிற்றிரிவரே. ௭௨௮

கட்டவேண்டுங்காளையைக் கடக்கவேண்டுமாசையை
ஒட்டவேண்டும்பூசையை யொடுக்கவேண்டும்வாசியை
யெட்டவேண்டுபுத்தியை யிருத்தவேண்டுங்காயத்தை
இட்டவேண்டும்ஞானத்தைக் கிடைக்கவேண்டுமுத்தியே. ௭௨௯

ஏற்றவும்வாசியினை யிறக்கவும்வாசியினை
மாற்றவும்வாசியினை மடக்கவும்வாசியினை
நீற்றவும்வாசியினை நிறுத்தவும்வாசியானை
நாற்றிசைவாசியினை நடக்கவிடும்வாசியே. ௭௩0

பூத்ததுவரும்பிலே புகுந்ததுமலரிலே
மூத்ததுமலரிலே மூத்தியதும்பிஞ்சிலே
ஏத்ததுவும்பிஞ்சிலே யிறுகியதுங்காயிலே
காத்ததுவுங்காயதிலே கண்டதுகனியதே. ௭௩௧

அஞ்சதிலேரெண்டது வறிந்ததில்லையெங்கினும்
பிஞ்சதிலேபூவது பொருந்துதிலைகாணவும்
நெஞ்சதிலேநின்றது நிலைத்ததிலைசொல்லவும்
கொஞ்சத்தினில்மிஞ்சமெத்த கொண்டியற்றவேலுமோ ௭௩௨

கையிலாதகுட்டையனுங் கட்டியேயடித்ததும்
காலிலாதநெட்டையனுங் கையின்மேலுதைத்ததும்
இய்யிலாமதுமூடவ னேரியங்குவுண்டதும்
வையமீதறிந்துகொண்டு வானமேறிவாழுமே. ௭௩௩

வேலூரென்றகோட்டையுள் விளக்கிராப்பகலெறிந்
தாலூருள்ளோர்காண்பதில்லை கண்படைத்தகுருடர்காள்
காலதூரில்நூறுகாதம் காடுசுற்றுமட்டங்கண்
ணூலூரீனுஞ்சென்றுவோட்ட நாட்டங்கொள்வாரிலலையே. எ௱சு

கண்டமேல்முக்கோணக்கோட்டை கட்டியகொடிமரம்
அண்டையுளமர்ந்தர்யோக பாணியாகநின்றுமே
சண்டைசெய்துராணுவத்தைத் தான்கெலிப்பராயிடின்
எண்டிசையின்வல்லராவ யெவருமஞ்சிடுவரே. எ௱டு

பாசமாம்வலைக்குளே பகட்டும்சொந்தவீட்டினை
நாசமாக்கித்தீயெரிந்து நாளுமேயழிக்குமுன்
வாசமுறவேசுழி முனையையோட்டவல்லவர்
ஈசனார்நிலைமருவி யின்பமாயிருப்பரே. எ௱சு

அன்னமொன்றிருந்துலாவு மழகுமண்டபத்தினில்
முன்னமொருவாண்புலி வுருமியுமெதிர்த்திட
தன்னிடத்திலஞ்சுகிளிகள் தாண்டியதைதச்சுற்றயில்
வென்னில்மூன்றுயாளிகள் விழுங்கவும்பார்க்கின்றதே. எ௱எ

தோப்பிலோங்குமாங்குயில்கள் கூப்பிடுமவ்வேளையில்
மாப்பிளைமார்வந்தங்ஙனே சாப்பிடவழைத்திட
ஏப்பமிட்டுவைந்தாராந்தை யெட்டியெட்டிப்பார்க்கவும்
ஆப்படித்தடக்கவல்லோ ராண்பிள்ளைகளாவரே. எ௱அ

மீன்கள்யாவுநீரினில் மேய்ந்திருக்குமவேளையில்
ஊனருந்தும்நாரைவந்து வொவ்வொன்றாய்ப்பிடித்துண்ண
வான்முகில்பொழியவேடு வன்வலையைவீசியும்
தான்மிகப்பிடிக்கவல்லோன் தாரணிப்பிறசித்தனே. எ௱கூ

நாகமொன்றுகொம்பிலேறி நாலுபக்கமபார்க்கையில்
வேகமாகச்சேவலொன்று வெம்பிகொக்கரித்திட
போகவெகுதூரமில்லை பொட்டெனப்பிடிக்கவும்
சோகமற்றுசூக்ஷங்கண்டோர்சுத்தஞானியாவரே. எ௲0

மேலைப்பட்டியோர்குளத்தில் மேவுமக்கரூரினில்
நாலுபக்கஞ்சேருமெத்த நாட்டிலிடைக்காட்டினில்
பாலதாகச்சுத்தஞ்செய்யும பண்புளானைக்கொண்டுமே
மேலையூரைக்கண்டுலாவி மேவியங்கிருந்திடே எ௲க

பாழதானபாழ்கிணற்றுட் பார்க்கரெண்டுகெண்டைகள்
தாழ்வுராதிருக்கவஞ்சார் காகமங்குதாக்கிட
சூழவோர்கழுகுனேக்கி சுற்றிவந்துகொல்லவும்
வீழ்ந்திடாததற்குத்தப்பி மீண்டுகொண்டதாருகாண். எசஉ

ஆற்றினில்முதலையந் தனேகநாளிருக்கையில்
வேற்றிடங்கரடிரெண்டு வெம்பியேமுரண்டிட
கூற்றுவனுமூவருடன் குருராபாசம்வீசியே
மாற்றிடப்பிடிப்பன்காலை வாங்கியுமடக்கிடே. எசங

முட்டையிட்டொருபறவை முன்னவயங்கார்க்கையில்
செட்டைவிரித்தோர்பறவை சென்றிடவுங்காட்டினில்
மெட்டைவைகன்னியில்ரெண்டு வேடுமான்கள்சிக்கியுங்
கட்டுண்டுதவிர்க்குதுபார் காணவல்லோர்காணவே. எசச

காலிரண்டிற்கோபுரமுங் கட்டியொன்றிருப்பதில்
மேலிருந்திறியமூர்த மேயருந்திநாளுமே
கோலிரண்டிலூதிலூதிக் கும்பித்துத்தம்பிக்கவும்
மாலிருந்துசெய்யவல்ல மாந்தர்களுமில்லையே. எசரு

அன்னமும்பெரிதலா லதிற்றண்ணீர்பெரிதல்ல
சொன்னமும்பெரிதலா சுவையெவைபெரிதல்ல
கன்னலும்பெரிதலாற் கருமபதுபெரிதல்ல
மன்னவன்பெரிதலால் மற்றவர்பெரியரலலவே. எசசு

மண்ணதுவிலாமலெங்கும் விண்ணுமில்லைகொஞ்சமும்
வாசமேயிலாமலெங்கு மலர்களில்லைசொல்லவும்
பெண்ணதுவிலாமலெங்கு மாணுமில்லைகாணவும்
பேரொளிகருகேரிருள பிரப்பதில்லையில்லையே. எசஎ

நாட்டமானஜோதிகாண நானிலத்துள்ளவர்கள்
பூட்டகமறிந்திடார்கள் பொய்க்குருவைத்தேடியே
வீட்டகமிருந்துபொல்லா வீண்கதைகள்பேசியுந்
திட்டகத்தில்மூழ்கியே தெளிந்திடாதிருப்பரே. எசஅ

பெண்ணுமாணுங்கூடியே பெரியவரங்காணது
எண்ணுநாதவிந்தமு மிருந்துகர்பமானதால்
மண்ணுவிண்ணிலாவிடின் மற்றவைஜனிக்குமோ
தண்ணீருமக்கினிபோலச் சங்கற்பவிகற்பமே. எசகூ

அன்றுதித்ததென்பதும்பொய் இன்றுகாளையென்பதும்பொய்
ஒன்றினைக்கருதலும்பொய் யுண்மையைவிரும்பலும்பொய்
நன்றதைச்செய்வதும்பொய் நற்கருத்துள்ளதும்பொய்
என்றைக்கிருப்பதும்பொய் யிறப்பதுமெய்யெண்ணிடே. எ௫0

வீணைசைகொண்டெங்குஞ்சுற்றி வேசிபோலோடியும்
தோணுதலைகளைப்பேசித் துட்டருக்குந்துஷ்டர்கள்
மாணாக்கர்பலரைக்கூட்டிமாதபியாகியும்
கண்ணுகாட்சியைககாணக் கத்திருப்பாரென்பரே. எ௫௧

பெண்டாட்டியாவதும்பொய் பிள்ளைகளாவதும்பொய்
கொண்டாட்டமாய்தாய்தந்தை குருவைபாரியாவும்பொய்
செண்டாட்டமாகசில பேர்களைக்கூட்டியும
திண்டாட்டப்படுவரெங்குந் தேடியோடிநாடியே. எ௫௨

நாயைப்போலும்பெண்டைப்போலுந் தன்முலையைத்தந்தவள்
மாயையாகவந்தவளே மாங்கலியம்பூண்டவள
பேயைப்போலும்பூதம்போலும் பேதிக்கப்பிடித்தவள்
நாயைப்போலுமாரியைப்போலும் நாடெங்குந்திரிவளே. எ௫௩

பாக்கியங்கள்வந்தென்ன பராக்கிரமம்வந்தென்ன
யோக்கியங்கள்வந்தென்ன யுயர்பொருள்கள்வந்தென்ன
வாக்கியங்கள்வந்தென்ன வைராக்கியங்கள்வந்தென்ன
போக்கியங்கள்வந்தென்ன பொல்லார்கட்கெந்நாளுமே. எ௫௪

திருத்தலந்திருப்பணி திருவிழாவுஞ்செய்திட
ஒருத்தர்நற்கதிபெறவு முள்ளதோசொல்லெங்கினும்
வருத்தமின்றியேழைகட்கு மாதுலர்பரங்கட்கும்
பெருத்தவன்னதானஞ்செய்யப் பேருலகடைவரே. எ௫௫

மெத்தைவீட்டினிற்படுத்து மெல்லியருடன்கூடி
அத்தையம்மான்கண்டெவரு மானந்தமிகக்கொள
சத்தையற்றிடவலார் சைதன்னியத்திற்சேர்வரோ
வத்தைதெனவறியா மானிடரென்றுநாளுமே. எ௫௬

ஏழைபஞ்சையானபேரி லேர்ப்பவர்துயர்தெரிந்து
கூழையாகிலுமவர்கொலை குளிரவீய்பவர்
வாழையடிவாழையாக வாழ்ந்திடவெந்நாளுமே
தாழையைப்போலத்தழைத்துச் சந்ததமிருப்பரே. எ௫எ

பஞ்சையும்பஞ்சிக ளாதியோரைவைதுமே
அஞ்சிடாதடித்தவ ரனியாயமுஞ்செய்திட
வஞ்சகவினைகள்சூழ்ந்து வாழுஞருமவிணதாய்
நஞ்செனநமன்கையினி லுசமாவரமனே. எரு௫

கண்ணினூற்கண்டிட்டதும் காதிற்கேட்டசொற்களும்
பண்ணபுண்ணியங்களுமபொய் பாவனசுகமும்பொய்
எண்ணரும்பலதவமபொய் ஈசன்பாதஞ்சேர்தலும்
மண்ணுவிண்ணும்பொய் கொடியமரவிழூநமெய்யதே. எருசு

வேதியர்தபோதனரை மெய்ச்சிவனடியரைச்
சாதியாதிகற்றுநிற்குஞ் சாஸ்திரிப்புலவரை
நீதியோதுமாதவரை நிட்டூரப்படுத்தியே
சூதுசெய்துவாதுசெய்யுந சோபரென்றும்மாள்வரே. எசுo

வம்புகள்வழக்குகள் செய்வாயிடும்பர்வஞ்சகர்
கும்புகூடிவார்த்தையாடி குடிகெடுக்குமபாதகர்
பம்புகள்வைப்புகள் பில்லிபார்வைசெய்யுமகுனியர்
நமபொருதிநம்பொருது நாட்டிலெங்குங்காணவே. எசுக

பொய்கொலைகட்காமமுடன் போதகுருவித்தைகள்
மெய்ப்படவுஞ்செய்துதிரி வீணர்களென்றுருமே
உய்துமன்னவத்திரங்க ளொன்றுமின்றிபதரதாய்
நைந்துமிக்கநாசமாகி நாட்டினிலலைவரே. எசுஉ

வாணர்கள்வைதியர்கள் மாதவர்கள்வேசையர்
வீணர்கள்சுயம்பாகி நாவிதன்வேந்தர்சேவகர்
பாணர்கள்குனியர்கள்மா பாதகர்கொலைஞரை
நாணவும்பகைத்திடாது நல்லுறவாய்நில்லுமே. எசுந

தன்னதுவீட்டிற்பெண்டிரைத் தானிறுத்திகாருமே
அன்னியரிடமுஞ்சென்று லங்கனேகுடியதாய்
முன்னிருக்குமுடர்பெண்டீர்முற்றுங்கற்புடையரோ
என்னசொல்வீரிவ்வகைக் கியம்பொருதியம்புமே. எசுச

சாதிபேதஞ்சொல்லுகின்ற சண்டாளர்கள்சந்ததம்
சூதிலாதன்னியரிடஞ் சுவைபருந்துமாரதாய்
தீதுறுமிழிகுலத்திற் றிண்டிகளேயுழன்றுமா
நீதிமெத்தசொல்வார்காண் ணீநிலகுருக்களே எசுரு

பாலுநெய்பழமுழுந்சீனி பசியிலாதுவுண்பவர்
நாலுவகைபேசவல்ல நாணயங்களுள்ளவர்
மேலுங்கீழும்பார்த்துவொனறை வெட்டிவெட்டிக்கொல்லுவார்
போலுமல்லகெட்டியல்ல பூட்டகமாய்ப்பேசவே. எசுசு

ஆரணங்கள்சாத்திரங்க ளாகமபுராணங்கள்
காரணங்கள்காவியங்கள் கலைகளியானஞானங்கள்
பூரணங்கள்பூதபு ரியவாந்தமானபவர்
நேரணையாய்ச்செரலெல்லமில்லோர சந்தரவரிப்பிலேயே. எசுஎ

எவரொம்வல்லசித்தரென்றே யெங்கிறுந்திரியவா
கல்லாதபேர்களுக்குக் காட்சிதரமேவென்றும்
செல்லாதவிடங்கள்சென்று நின்றடிகமேயாவோவரு
பொல்லாதகாலந்துக்கேற போங்காலமீதாகுமே எசுஅ

முத்திமுந்தியென்றுசொல்லி முன்றெனைக்காணுமேல
கத்திகத்திககண்டவரில்லை காலிடைவில்விழுவர்
பத்திபத்தியாய்த்துதித்துப் பாடியும்பரமனை
சுத்திசுத்திவந்துமணி ருதர்பதமுஞ்சேர்வரோ. எசுகூ

அரிதிலுமரிது மானிடப்பிறவியாவது
அரிதிலுமரிது கூன்குருடுசெவிடிலாதது
அரிதிலுமரிது வாணதிலறங்கள்செய்வது
அரிதிலுமரிது ஞானவீடடைவதொன்றுமே. எஎ0

மாடுமக்களழகினிகாடு மானியங்கள்தேடியே
வீடுகட்டிமேடைகட்டி மெத்தைமேலுலாவியும
நாடுவிட்டுதூரதேசம் லாபந்தேடவோடிவீண்
பாடுபட்டபுல்லர்கள் பதமடையக்கூடுமோ. எஎக

ஒன்றதாய்ப்பலவதாயங் குள்ளதாய்ப்புறமதாய
நன்றதாகித்தீயதாகி நான்மறைக்கெட்டாததாய்
சென்றதாய்ச்செனிப்பதாய் சிறப்பதாய்ச்செழிப்பதாய்க்
கன்றதாய்த்தாயதாய் காப்பதும்சிவாயமே. எஎஉ

பிணமதாகிலுயிர்கொடுத்துட் பின்னைநையெழுப்புவோன்
மணமபெறவுருக்கித்தங்கம் வார்த்திடவோனபாரபாய்க்
கணமெனும்பூதப்பசாசினைக்கதறவோட்டுவோன்
குணமெனகுணமுடன்போர் முக்திகோறியங்கடைவரோ.

